வெளியீடு எண் 298.

# ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

# வரலாறு

தருமபுர ஆதீனம்.



தருமபுர ஆதீன ஸ்தாபகர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வெளியீடு எண் 298.

உ

குருபாதம்

தருமபுர ஆதீன ஸ்தாபகர்

# ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு.

இது

தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்**

ஆணையின்வண்ணம் வெளியிடப்பெற்றது.

**தருமபுர ஆதீனம்**

*1953*

# முகவுரை

தருமபுர ஆதீனத்து முதல்குரு ஸ்ரீகுருஞான சம்பந்த சுவாமிகள் அவர்கள் தென்தமிழ்நாட்டில் சிவநெறி பரவச்செய்த பணிகள் பல. அவர்கள் பூசித்த ஸ்ரீ சொக்கலிங்க மூர்த்தியை உயிராகக் கொண்டு ஆதீனம், உயிர்நிலையாக விளங்கி, பதி புண்ணியம் பசுபுண்ணியங்களைச் செய்துவருவதைத் தமிழ்நாட்டவர்களும் ஏனையோரும் நன்கு அறிவர். அவர்கள் வரலாற்றையும் எல்லாரும் அறிய இந்தச்சிறுநூல் தமிழ் ஆங்கிலம் இருமொழிகளிலும் வெளிவருகின்றது. இதில் ஆதீனத்தின் கொள்கையாகிய சைவசித்தாந்த அடிப்படைக் கொள்கைகளும் பிறவும் சேர்க்கப்பெற்றுள்ளன. இவ்வாதீனத்தின் 25-வது மகாசந்நிதானம் அவர்கள் இந்த வெளியீடு எல்லாருடைய கையிலும் விளங்கிக் கருத்திலும் பதியவேண்டும் என்ற பெருங்கருணையால் வெளியிட்டருளுகின்றார்கள்.

வாழ்க மெய்கண்டான் மரபு.
வாழிய தருமை, வாழிய குருவருள்.

" கயிலாய பரம்பரையிற் சிவஞான சித்திநெறி
காட்டும் வெண்ணெய்

பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்

குயிலாரும் பொழிற்றருமை வாழ்ஞான
சம்பந்தக் குரவன் மேலாஞ்

சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ "

உ

குருபாதம்.

# ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு.

செந்தமிழ் வளரும் தென்றலின்பமும் முந்துற நுகர, முழுமுதற்கடவுளாகிய சிவபெருமானால் மன்னர் மன்னனாக மணிமுடி தாங்கிச் சவுந்தரபாண்டியன் எனும் பேர் சார்ந்து ஆளப்பெற்றதும், தமிழ் நயம் தெரிந்து சைவம் காத்த பெரும்புனல் வையைத் திருவளம் பெருக்கும் சிறப்புடையதும் ஆகிய பாண்டிவள நாட்டிலே 'மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால் சொன்னார் கழற்கமலம் சூடினோம்' என்று தன்பெயர் கூறவே பேரின்பமும், பெறுபயனும், தெய்வத்தன்மையும் அளிப்பதாய ஸ்ரீவில்லிபுத்தூரிலே, தாளாற்

றித் தந்த பொருளெல்லாவற்றினையும் நக் கார்க்கு வேளாண்மை செய்யும் சிறப்பு வாய்ந்ததும், மன்னன் செங்கோலையும் தன் ஏர்க்கோல்வழி நடாத்தும் மாண்பு வாய்ந் ததும், வானம் தந்த மழைப்பயன் கொண்டு வாரிபெருக்கி வளம்பல செய்து தானமும் தவமும் தடையின்றி நடக்கச்செய்யும் பெருமை சேர்ந்ததுமாகிய கார்காத்த வேளா ளர் குடியிலே, "கற்றல் கேட்டலுடையார் பெரியார்" என்னும் ஞானநூற் சொற் றொடரைப் பெருவரம்பாகக்கொண்டு, சமய சாத்திர நூனுக்கங்களை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்து நற்றவச் செல்வராய், சிவபூஜை தியானம் சிவாலய வழிபாடு முதலியவைகளைச் செவ்வனே செய்துவரு கின்ற சுப்பிரமணிய பிள்ளை என்கின்ற ஞானச்செல்வர் ஒருவரிருந்தார். அவருக்குப் பண்டை நற்றவத்தால் இல்லறப்பண்பு எல் லாம் ஒருங்கு வாய்ந்த நற்குடிப்பிறந்த

மீனாட்சியம்மை என்னும் கற்பிற் சிறந்த பொற்புடை நங்கை நல்லூழ் கூட்ட இல் லறத் துணைவியாயினர்.

இவர்கள் இருவரும் இல்லறத்தையே இம்மை மறுமை இரண்டும் தரும் நல்லற மாக நடத்தி வந்தனர். இவர்கள் சிந்தை எப்பொழுதும் சிவத்தினிடமே சேர்ந்திருந் தமையால் இவர்கள் செய்யும் புண்ணி யங்கள் யாவுமே சிவபுண்ணியங்களாயின. அத்தவத்தின் மிகுதியால் சிவஒளி திகழும் தவநிறை குமரர் அவதரித்தார். பிறந்த நாளோ இறைவனுக்குகந்த திருநாளாகிய சோமவாரம். செல்வச் சிறுவரின் முக வொளி, பெற்றோர் மனதைக் கவர்ந்ததென் பது ஒரு வியப்பன்று. குழவியைக் காண வந்தவர்களுள் தெய்வவொளி திகழும் சிறுவ ரென்பார் சிலர். உலகம் உய்யப் பலகலை நிறைந்த பாலரென்பார் சிலர். இங்ஙனம்

வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பாலுணர்த்தும் திருமேனியைக் கண்டு பலரும் வியந்து பாராட்டுவாராயினர். கண்டவர் மனத்தை வசீகரிக்கும் கருணைக் குழந்தையின் பெற்ரோர் மனம் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்தமைபற்றி அறிவிக்கமுடியுமோ? வளர்ச்சி காலத்துத் தளர்நடை நடத்தல் சிறுதேருருட்டல் சிறுபறை கொட்டல் முதலிய பிள்ளைப்பருவ விளையாட்டுக்கள் யாவும் உரியகாலத்தே நிகழ இளமைப் பருவத்தின் ஐந்தாம் பருவத்தை அடைந்தார். பக்குவமறிந்து மார்ச்சார நியாயத்தால் வலியவந்து ஆட்கொள்ளும் பரமாசாரியனைப் போலக் கல்வி ஞானமும் இவரை வந்து ஈண்டின. இருமொழிப் புலமையும் ஒருசேர எய்தின. உலகத்து வினைவயத்தானெழுந்த பிறப் பொன்று; பண்டை நற்றவத்தால் உலகிற்கு நல்வழி காட்டவந்த பிறப்பு மற்ரென்று. வினைப்பிறப்பு கல்வி ஞானத்

தையும் கூட மிகுந்த உழைப்பாலுறும்; உற்றதையும் மறக்கும். அருட்பிறப்பைக் கல்வி ஞானமும் தாமே வந்து அடைந்து பெருமை எய்தும். இவர்கள் பிறப்போ உய்விக்கவந்த பிறப்பு. ஆதலால் கல்வியிற் சிறந்தோர்கள் என்பதில் வியப்பொன்றுமில்லை. இவ்வாறாக ஞானச்செல்வர் பதினாறும் ஆண்டினை அடைந்தார். தாய்தந்தையர்களும் கல்விகேள்விகளிற் சிறந்த மகனைத் தம்மிற்றம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாம் என்று எண்ணி எண்ணி மகிழ்ந்திருந்தனர்.

அப்போது தமது ஆன்மார்த்தமாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வழிபட வேண்டும் என்ற பெருவிருப்பம் தாய் தந்தையர்கட்கு உண்டாயது. தமது அரும் பெறற் செல்வரையும் அழைத்துக்கொண்டு மதுரையம்பதியை அடைந்தனர், புலவர்

தலைவராயிருந்து புலவரைப் போற்றிய பெருமானும் - வாதவூரடிகளை வழியடிமை கொண்ட வள்ளலாய்-வேதத்திற்குப் பொருளருளிய விழுமிய தலைவனும் - முப்பொருளுண்மைகளையும் முத்திநிலையையும் உணர்த்திய முதல்வனுமுள்ள சோமசுந்தரக்கடவுளையும், தமிழ்நாட்டுத் தனியரசியாய் - கடைக்கண் கொழித்த கருணைப் பெருவெள்ளத்து மூழ்கும் அடியார் பிறவிப்பிணிக்கு ஓர் மருந்தாய் - மலையத்துவசன்பெற்ற பெருவாழ்வாயுள்ள மீனாட்சியம்மையாரையும், வணங்கிக் கொண்டு சிலநாள் அங்கு வதிந்தனர். காலந்தவறாது வழிபாடு செய்துவந்தனர். அப்போது கண்ணுதற்பெருமான் கடைக்கண் பெருவெள்ளம் ஞானசம்பந்தர்மீது பாயத் தொடங்கிற்று, சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது. தெய்வக்கலை மேன்மேலும் விளங்கத் தொடங்கிற்று. அதனால் இல்லத் தொடர்பு மெல்ல நழுவிவந்தது.

தாய்தந்தையர்களோ இல்லறப்பற்று இழுக்க வில்லிபுத்தூர் செல்ல விரைந்தனர். சமயமுறைப்படி கோயிலுக்குச் சென்று பொற்றாமரையில் நீராடி விடையேறும் பெருமானிடம் விடைகொண்டனர். வீடு திரும்புகிறவர்கள் செல்வக்குமாரரை -ஞான சம்பந்தரை வீட்டுக்கழைத்தனர். குமாரர் மனமோ நிலைத்த குறிக்கோளில் நிலைத்திருந் தது. தந்தையார் அழைப்பு செவிபுகவில்லை. மீட்டும் மீட்டும் வற்புறுத்தி அழைத்தனர். சிவஞானத் தேன் அருப்பு சிந்தையராகிய ஞானசம்பந்தர் "என் உயிர்த் தந்தையும் தாயும் இவ்வாலயத்தில் இருக்கின்றார்களே; இவர்களை விட்டு எங்ஙனம் நீங்குவேன்; எப்படி வருவேன்; உடற்றந்தையாகிய உங்க ளோடு எனக்கு உறவில்லை" என்றுரைத் தனர். இதைக்கேட்ட தாய் தந்தையர்கள் மனம் கலங்கினர். ஞானசம்பந்தர் சாத்திர தோத்திரவாயிலாகப் பலபல சமாதானங்கள்

சொல்லித் தேற்ற, ஒருவாறு தேறிச் செல்கின்றவர்கள் தமது செல்வர் சிவஞானப் பெரியாராக - சமயம் வளர்க்குந் தலைவராக ஆகக்கூடும் என்ற எண்ணமானது அவருடைய நிகழ்ச்சியாலும் திருவருளாலும் மனத்துள் தோன்ற மட்டற்ற மகிழ்ச்சியோடு இல்லம் அடைந்தனர்.

பின்பு ஞானசம்பந்தர் விதிமுறை வழிபாடாற்றிப் பல நாள் மதுரையில் வசித்து வந்தனர். ஒரு நாள் விடியற்காலையில் பொற்றாமரைத்தடத்து நீராடச்சென்றனர். அங்கு திருநீறும் கண்டிகையும் திகழ்தரு மேனியோடு வடக்குநோக்கி யிருந்து சிவலிங்கத் திருமேனியைத் தம்முன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு பல அடியார்கள் தன்வசமற்று நா குழற, உரை தடுமாற, கண்ணீர் வாரச் சிவபூஜை செய்துகொண்டிருத்தலைக் கண்டார். தாமும் அவ்வாறு

சிவபூஜை செய்து சிவானந்தத்துள் திளைத் திருப்பது எந்நாட் கூடுமோ என்று எண்ணிக் கொண்டே ஒரு விருப்பும் இன்றி வழிபாடு செய்துவரும் அவர் அன்று சொக்கேசர் திருமுன்பு "தேவரீருடைய அருட்டிருமேனி யைவைத்து அருச்சிக்கும் பேறு எனக்கும் இப்பிறவியில் கிட்டுமா?" என்று வேண்டி நின்றனர். நெடுநேரஞ்சென்று அந்தக்குறை மனத்தோடு வீடுசென்று அன்றிரவு துயில் கொண்டனர்.

குறை முடித்தருளுகின்ற நிறை செல்வச் சொக்கர் அவர் கனவில் எழுந் தருளி 'ஞானசம்பந்த! நீ விரும்பிய வண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனிகொண்டு பொற் றாமரைத் தடாகத்தின் ஈசான மூலையிலே கங்கைக்குளிருக்கின்றோம்; காலையில் அங்குச் சென்று மூழ்கி எம்மைப் பூசிப்பாயாக' என்று திருவாய் மலர்ந்தருளினார். ஞான

சம்பந்தர் 'இறைவன் அருட்செயலிருந்தபடி என்னே! எளிவந்த கருணையால் அடியேனை யும் ஆட்கொண்டனரே; இதனைக்காட்டி லும் இப்பிறப்பில் எளியேனெய்தும் பேறு வேறுண்டோ' என்று எண்ணி எழுந்து ஆனந்தக்கூத்தாடித் தோத்திரித்த வண்ண மாகவே விடியுமளவை எதிர்நோக்கினர். அவர்கள் உள்ளத்தின் விரைவு விடியலை நெடிதாக்கி விட்டதாகத் தோன்றிற்று. விடியல் நீள, விழைவு பெருகுகின்றது. விடிந்ததும் நாட்கடன் முடித்து நீராடப் பொற்றாமரைக்குச் சென்று நீராடி இறைவ னுணர்த்திய இடத்தில் இறங்கி மூழ்கித் தேடினர். அப்போது இறைவன் சிவலிங்கத் திருமேனிகொண்டு பெட்டகக்கோயிலோடும் இவர் கரத்தில் எழுந் தருளினர். உடனே ஞானசம்பந்தர் கரையேறிப் பெட்டகத்தைத் திறந்து சிவலிங்கத் திருமேனியைக்கண்டு சிந்தைநிறைந்த மகிழ்ச்சிக்கடலிற்றிளைத்து,

ஆனந்தக்கூத்தாடி, சந்நிதியை அடைந்து, சொக்கநாதப் பெருமானை வணங்கிக் "**கண்ணுக்கினிய**" என்னும் திருப்பாடலை முதன்மையாகக்கொண்டு பதினொரு பாடல்களைக் கொண்ட கலித்துறையை ஆக்கி அருளினார்கள். அதில் ஆன்மவியல்பை எடுத்துக்கூறிச் சொக்கநாதப் பெருமானை நோக்கி "நீ பூரணவாரியுள்ளே நண்ணும்படிச்செய்; நின்னைப் பாடும்படிச் செய்; நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே ஆடும்படிச் செய்; மலமைந்தும் வீடும்படிச்செய்" என வேண்டுகின்றார். மற்றும் 'ஏருத விண்ணப்பம் கூறுகின்றேன், அஃது ஏதெனில்" எனத் தொடங்கிச் சொக்கநாதர் திருச்செவியில் ஏற்றிய வரந்தான் இன்றைக்கும் என்றைக்கும் சொக்கலிங்கத் திருவுருவிடை இறைவன் இருந்து அருள் வழங்கி நிற்கும் அருளாற்றலாகும்.

இவ்வண்ணம் சொக்கநாதப் பெருமானை வழிபட்டு எழுந்தருளியிருக்கின்ற வேளையிலே சிவலிங்கப்பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறைகளையும் சிவ ஞானோபதேசத்தையும் ஒரு ஆசாரியன் வாயிலாகவே அடையவேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்பு சென்று வேண்டினர். கருத்தறிந்து முடிக்கும் கண்ணுதற்பெருமான் அன்றிரவு வழக்கம்போலக் கனவிற்றோன்றி "ஞானசம்பந்த! நமது உபதேச பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசரிடம் நீ விரும்பியவற்றைப் பெற்று பூசித்துவருக" என ஆணை தந்தனர். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி "வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வருகிற நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம் செய்து சிவலிங்கபூசையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுக்க" என்று கட்டளையிட்டனர்.

ஞானசம்பந்தர் விடியலெழுந்து சொக்க லிங்கத் திருவருள் இருந்தபடியே திருவாரூர் செல்லத்தொடங்கி, திங்கட்கிழமை காலை திருவாரூரையடைந்தனர். கமலாலயம் என இப்போது வழங்கும் தேவ தீர்த்தத்தில் நீராடி "இன்றுதானே பெருமான் அருளிய இனிய நாள்; குருநாதன் தரிசனம் கிடைக்கும் பெருநாள்" என எண்ணிக்கொண்டே திருக்கோயிலை வலம்வந்தனர். இவ்வாறே சொக்கலிங்கப் பெருமான் ஆணை தாங்கி வருகின்ற அருந்தவச்சீடர் கிடைக்குநாள் இதுவே என்று திருவாரூர்ச் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தித் திருமுன் கமலை ஞானப் பிரகாசர் சிவயோகத்தினிதமர்ந்திருந்தனர். அப்போது வலம்வருகின்ற ஞானசம்பந்தர் ஈனமல இருள் நீக்கும் ஞானபாநு இவர் தாம் என்பதை அறிந்து காந்தங்கண்ட இரும்புபோல் விரைந்துசென்று திருவடிகளில் விழுந்து வணங்கி ஒருபக்கத்து

ஒதுங்கி நின்றார். அப்போது ஞானப் பிரகாச தேசிகர் அபய அத்தங்கொடுத்து, தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே யிருக்கப் பணித்து, திருவருள்நோக்கஞ்செய்து ஞான தீக்கை புரிந்து பூசையை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்தனர். ஞானசம்பந்தர் தமது குருநாதன்மேல் **பண்டாரக் கலித்துறை** என்னும் ஒரு நூலையியற்றித் தோத்திரித்தனர். பின் தமது ஆன்மார்த்த மூர்த்தியின்மேல் **சொக்கநாதவெண்பாச்** சொல்லித் தோத்திரித்தனர்.

இவ்வாறு குருவழிபாடும் இறைவழிபாடும் இயற்றிக்கொண்டு திருவாரூரில் எழுந்தருளியிருக்கும்போது ஒருநாள் மாலைக்காலத்து, கமலை ஞானப்பிரகாசர் திருக்கோயில் வழிபாட்டிற்காகச் சென்றவர்கள் அர்த்தயாமம் ஆகும்வரையில் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத்

தமர்ந்திருந்தனர். அர்த்தயாமம் ஆனதும் வீட்டுக்குத் திரும்புகையில் கைவிளக்குக் காரன் தூங்கிவிட்டமையால் ஞானசம்பந்தர் தாமே சென்று கைவிளக்கை எடுத்துக் கொண்டு உடன்வர, குமரகோவில் பின் தெருவிலுள்ள தமது இல்லத்திற்கு எழுந் தருளினர். வீட்டுக்குள் செல்லுகின்ற ஞானப்பிரகாசர் தமது சீடரை நோக்கி "நிற்க" எனப் பணித்துச் சென்றார்கள்.

'குருவாணை நிற்க என்றுதானே' என எண்ணிய அவர்கள் நின்ற இடத்திலேயே சிவயோகத்தமர்ந்து சிவானந்த இன்ப நிலையில் மூழ்கியிருந்தனர். அன்று இரவு பெருமழை பெய்தது. பெய்தும் திருமேனி யில் ஒரு துளிகூட விழவில்லை. ஒருகோல் சதுரத்தில் சுற்றிப் பெய்திருந்தது. விடியலில் விழித்து இல்லம் விளக்கவந்த ஞானப்பிரகாசருடைய மனைவியார் கை

விளக்கேந்தி ஞானசம்பந்தர் நிற்பதையும் மழையின் நிலையையும் அறிந்து வியந்து உள்ளே சென்று தம் கணவர்க்கு உணர்த்தினார்கள். வெளிப்போந்த ஞானப்பிரகாசர் இவர்களது அதிதீவிர பக்குவநிலையை அறிந்து "அப்பனே! உன்னாற் பல ஆன்மாக்கள் பல்லூழி காலம்வரை ஈடேறத் திருவருள் துணைநிற்கின்றது. ஆதலால் வடக்கே சென்று உபதேசவாயிலாக உண்மையைப் பரப்புக; சித்தாந்த சைவச் செந்நெறியை நிலைநிறுத்துக" என்று ஆணைதந்தனர். அதனைக்கேட்ட இவர்கள் மனம்பதைத்துத் "தேவரீரைவிட்டு எவ்வாறு பிரிந்திருப்பேன்; எருதுக்கும் பொதிக்கும் இச்சை உண்டோ; எனக்கும் உடற்கும் அப்படியே; ஆதலால் பரமாசாரியர் பணித்தபடியே நடக்கக் கடமைப்பட்டவன்" என்று வருந்தி நிற்கின்றபோது, "நமக்கு மிக அணிமையிலுள்ள சித்திக்ஷேத்திரமாகிய தருமபுரத்தை

அடைந்து ஆண்டுத்தங்கி அருள்வழங்குக" என்று ஆணை தந்து அனுப்பினர். தெளிவு குருவின் திருவார்த்தையைக் கேட்டவ்லாத லின் ஆசிரியர் ஆணைப்படி தருமபுரம்வந்து அருள் வழங்கி அமர்ந்திருந்தனர். தமது சிவாநுபவங்களை யெல்லாம் செறித்துப் பெரும்பொருளடக்கிய சிறு நூலாக— சிந்தை தெளிவிக்கும் தெளிதேனாக உள்ள **சிவபோகசாரத்தையும், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவலையும்** அருளிச் செய்தனர்.

இவர்கள் இவ்வாறு ஞானபாநுவாய் எழுந்தருளியிருக்குங் காலையில் சிதம்பரத்தி லுள்ள கண்கட்டி மறைஞான பண்டாரம் என்பவர் ஒரு கல்விமானாக விளங்கிவந்தார். அவர் ஆகம சாத்திரங்களிலும் சைவப்பெரு நூல்களிலும் தக்கபயிற்சியும் அநுபவமும் உடையவராயிருந்தார். ஆனால் அவருக்குத்

திருவருள் விலாசம் பதியவேண்டிய நிலையி லிருந்தது. அதனால் அவருடைய அநுபவ மானது ஆன்மாவிற்கே இயற்கையாக ஆனந் தம் உண்டென்றும், அது மலத்தால் தடைப் பட்டிருக்கிறதென்றும், தடைநீங்க வெளிப் படும் ஆனந்தத்தை ஆன்மா நுகருகிறதென் றும், சிவனை ஒப்ப ஆன்மாவும் சச்சிதானந்த ரூபியென்றும், அதுவே முத்திநிலையென்றும் உணர்ந்து முத்திநிலை என்றதொரு நூலையும் அருளச்செய்தது. மக்கள்பலரும் இக்கொள் கையை இவருடையகல்வி வல்லமையாலும் சொல்லுந் திறத்தாலும் பசிநீங்கக்காணும் இன்பம்போல மலம்நீங்கக்காணும் மகிழ்ச்சி என்ற முறைமையின் எளிமையினாலும் கடைப்பிடித்தனர். இதனைத் திருவுளம் பற்றிய இக்குருமூர்த்திகள் மக்கள்மேல் வைத்த பெருங் கருணையினால் ஆன்மாவுக்கு ஆனந்தம் இயற்கையல்ல என்றும் திரு வருட்பதிவால் மலம்நீக்கிச் சிவானந்தத்துத்

இலக்கும்பேறே முத்தியென்றும், ஆன்மா சத்சித்ரூபியே சிவம் சச்சிதானந்த ரூபி என்றும், ஆன்மாவிற்கு உளதாகும் ஆனந்தம் இறைவனிடத்திலிருந்து பெற்றபேறே என்றும் முடிந்தமுடிபாக இருபத்திரண்டு வெண்பாக்களாலாகிய **முத்தி நிச்சயம்** என்னும் அனுபவ ஞானநூலை ஆக்கியருளினார்கள்.

இவ்வாறு பலநாள் அரன்பணி அறப்பணி ஆற்றி ஆனந்தபரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபதுத்தாரணர் முதலான சீடர்களுக்குச் சிவஞானோபதேசம் செய்து எழுந்தருளியிருக்கும் காலத்து, சிவயோக சமாதியில் எழுந்தருளத் திருவுளங்கொண்டு தீவிரதரபரிபக்குவராகிய ஆனந்தபரவசரை ஞானபீடத்தில் எழுந்தருளுவித்துத் தாம் விரும்பியவண்ணம் சிவலிங்கத்தினடியில் அமர்ந்தார்கள்.

ஆனந்தபரவசர் கனிந்த கனியாயிருந்த தால் அவர்களும் தமது ஞானமூர்த்தியின் திருக்கோயிலின் மேல்பால் சிவயோகத்தில் அமர்ந்தனர். இதனை அடியார்கள் விருப்பப் படித் திருவுளத்தடைத்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில் நீடு வாழ எண்ணி, மீள சிவயோகத்தினின்றும் வெளிப்போந்து சச்சிதானந்தருக்குச் சிவ ஞானங் கைவரப்பண்ணி வைகாசிமீ அபர பக்க சப்தமி தினத்திலே சிவசமாதி கூடினார்கள்.

இவர்கள் குருவாகிய கமலை ஞானப்பிர காசரைப்பற்றிய, சதாசிவதேவ மகாராயர் காலத்தில் அவர்பிரதிநிதியாகத் தஞ்சையை ஆண்ட கிருஷ்ணதேவராயர் பெண்வயிற் றுப்பேரனை கிருஷ்ண மகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன் றில் "சிக்கல் வடகுடி ஓடாச்சேரி முதலிய

தேவதானங்களுக்குத் திருவாரூர் ஞானப் பிரகாச பண்டாரத்தை, கணக்குஎழுத்தும் **பரதேசி முத்திரையும்** அடைத்துக் கொள்ளும்படிக்கு உத்தரமளிக்கிறது'' எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசனகாலம் கி. பி. 1561. அன்றியும் கமலைஞானப் பிரகாசரியற்றிய மழுவாடிப்புராணத்துச் செய்யுளாகிய இது,

தழுவிய கலியு கஞ்சேர்
சகாத்தமா யிரத்து நானூற்
றுழிதரு மெண்பத் தேழாண்
டொழிந்தபின் குரோத னண்டின்
மொழிதரு மாசித் திங்கண்
முற்பக்க முதனாள் தன்னின்
மழுவையம் புராணந் தன்னை
வகுத்தனன் தமிழி னாலே.

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ்விரு ஆதாரங்களும் ஞான

சம்பந்தர் காலம் சுமார் 390 ஆண்டுகட்கு முன்னர்என்று துணிய இடந்தருகின்றன.

இங்ஙனம் திருக்கயிலாய பரம்பரையில் அவிச்சின்ன சத்சம்பிரதாயியாகிய இந்தக் குருமூர்த்திகள் தன்னடைந்தார்க்கு ஊனுடைப்பிறவிக் கானத்து உழலாது முத்திநாடெய்த ஓர் ஞானவாரணம் நல்கும் பெருமானாக - ஞானவாரமுத பானமதருந்திக் கருவிகள் கழன்று பரவசமாகிப் பரமானந்தப் பரவையுட் படிந்து பேராவியற்கை பெற்றினிதிருப்ப ஆரா இன்பமளித்தருள் அண்ணலாகத் திருக்கோயில்கொண்டு எழுந்தருளி யிருக்கின்றார்கள் என்பது ஏனைய குருமூர்த்திகளது சமாதித் தானங்கள் போலாது இவர்களுடைய கோயில் ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயம் என்ற திருநாமத்தோடு சகல ஆவரண பரிவாரங்கள் சூழ விளங்கிவருவதாலும், நித்திய பூஜையோடு

பிரமோற்சவ மாசோற்சவ பக்ஷோற்சவங்கள் இடையறாது நடைபெற்று வருவதாலும் அறியக் கிடக்கின்றது. இது கண் கண்ட தெய்வமாக விளங்குகின்ற குரு ஞானசம்பந்தருடைய திருக்கோயிற்குள்ள தனி மாண்பாகும்.

---

கதிவாழ்க வேதநல் ஆகமம்
    வாழ்கநற் கண்மணிஉன்
பதிவாழ்க சைவம் திருநீறும்
    கண்டிகையும் வாழ்கஅருட்
குருவாகும் நின்றன் திருக்கூட்டம்
    வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ் தருமைத் திருஞான
    சம்பந்த தேசிகனே.

# GURUGNANASAMBANDHA

## the founder of the Dharmapuram Adhinam Mutt

There lived long ago at Villiputtur in the Pandya Kingdom a devout couple, Subramania Pillai and Minakshi Ammal, belonging to the agriculturist class. (Karkatta Saiva Vellala Caste) A son was born to them who shone with divine splendour. From the age of five learning and wisdom seemed to woo him of their own accord and by his sixteenth year he was a full-fledged scholar.

The parents of the boy once took him to Madura for offering worship at the shrine of Chokkalinga and prolonged their

stay there for sometime discharging devotional duties. The boy, *Gnanasambandha* by the grace of Sundareswara and Minakshi gradually attained spiritual awakening to such a degree that he refused to go back to Villiputtur with his parents who had finished their pilgrimage.

Gnanasambandha lived alone at Madura continuing his worship at the shrine and leading the well regulated life of a devotee. One early morning when he went to the golden lotus tank for bathing, he discried a number of pious men wearing the sacred ash and the Rudraksha worshipping the idol of god placed in front of each of them, with devotional ecstacy. He longed to do worship as did those devotees and prayed before Chokkalinga to vouchsafe to him also such a blessed privilege, that night

god appeared in his dream and spoke, "Your wish shall be fulfilled. You will find in the north eastern corner of the tank an image of mine for your worship". Accordingly, Gnanasambandha during the early hours before dawn next day rushed eagerly to the spot, plunged into the water and lo! to his immense delight, brought out the sacred symbol of god. He then gave vent to his ecstacy in eleven stanzas the first of which opens with the world, *"charming to the eye"*. He prayed to God therein that it must be given to him to sing the praises of god, to worship god, to meditate upon god—and in short, to live in god perpetually.

God Chokkanatha in another dream directed Gnanasambandha to approach *Gnanaprakasa of Kamalai* for being

initiated in the processes of worship and in the spiritual progress. God also intimated in a dream to Kamalai Gnanaprakasa the arrival of a pupil by His direction.

Gnanasambandha next set out for Tiruvarur and reached the place on a Monday and found the god appointed guru sitting in contemplation Dakshinamurti image in the great temple of Thiyagaraja. Gnanasambandha fell at the feet of Gnanaprakasa. and the guru gave him the Diksha of worship and *Gnana*. Gnanasambandha guru and Chokkanathavenba in praise of his favourite deity.

Gnanasambandha lived at Tiruvarur near his guru striving intently on the path of devotional and spiritual progress. One night Gnanaprakasa returned late from his meditation before the Dakshinamurti in the

temple and the streets being dark and the usual lamp-bearer having gone to sleep, Gnanasambandha bore the lamp in his hand and led the guru to his a bode. On entering his residence the guru bid the sishya stay and went in. "The sishya obeyed the guru's word and stayed at the gate, lamp in hand, all the night, forgetting himself in the contemplation of Siva. It showered heavily that night, but for a few yards about him not a drop fell. When next morning the wife of Kamalai Gnanaprakasa opened the door she found Gnanasambandha standing there lamp in hand and undrenched by the night showers. With astonishment she went in and informed her husband of the miracles. Gnanaprakasa came out and saw and being convinced of his pupil having attained spiritual perfection gave him directions to take his abode at Dharmapuram not far off from

Tiruvarur for spreading the great truths of the Saiva Siddhanta.

Gnanasambandha, though inconsolable at the separation still obeyed and settled at Dharmapuram and there wrote the *Sivabhoga Sara* and the *Tripadartha Rupadi Dasakarya Ahaval.*

During the hey day of Gnanasambandha's glory, there lived at Chidambaram *Marai Gnana Pandaram* "The blind folded" who was well versed in all the Agamas and the great Saiva works, but was lacking in God's grace. He postulated in his work called *Mukti Nilai,* "the nature of salvation" that *Ananda* was an inherent trait of the Atma, that *Mala* stood in the way of the delectation and that when the obstruction was removed *Atma* could taste the bliss,—on the basis that like Siva the

Atma also was *Satchidanandarupi.* Hosts of men adhered to his teachings beacuse of his deep learning and powerful, exposition. But Gnanasambanda refuted the doctrine in his *Mukti Nischaya,* consisting of twenty two stanzas and established that Ananda is not inherent in Atma, that Atma is only *Satchitrupi* that when the *Mala* is brushed away God's grace Atman plunges into *Sivananda* and that merger is *Mukti* or salvation.

Guru Gnanasambanda thus served Siva and the cause of Dharma for several years and gathered round him pupils like Ananda Paravasa Satchidananda, Marudur Apadud-dharana and others. Upon his choosing to enter perpetual *Samadhi* he appointed as his successor in the *Gnana Pitha, Ananda Paravasa.* But the latter being for Advanced in spiritual evolution, stayed in

perpetual *Samadhi* to the west of where, his Guru stayed therefore the Sishya group with a view to giving to the world an unbroken line of the gurus, invoked Guru Gnanasambandha to nominate another successor. The nomination then devolved upon Satchidananda and the guru attained *Sivasamadhi* finally in *Vaikhasi Aparapaksha Saptami*.

An inscription of Krishna Maharaya Ayyan King of Tanjore and daugther's son of Krishnadeva Raya during the times of Sadasiva Maharaya appoints Tiruvarur Gnanaprakasa Pandaram as the Superintendent of the *Devadanams* of *Sikkil, Vadakudi, Odacheri* etc. and bears a date equal to 1561 A. D. A stanza in the *Mazhuvadi Purana* written by Kamalai Gnanaprakasa records the date of its composition as Salivahana Sakabda 1488 (equal

to 1566 A D) These two authorities prove that Gurugnanasambandha lived about 390 years ago (in the second half of the sixteenth century).

In the unbroken line of the successors in the *Tirukkailaya Paramparai* the great guru unlike the others who remain at the places of their samadhi, has taken his above in a shrine called the temple of *Gnana-puriswara* and endowed with all the paraphernalia and the appurtenances usual to such an installation, for being the guide to salvation for all who resort to him.

# Our School of Thought:

Intelligence, He called me.
The Joy within my intelligence,
He called Sivam
What constantly hid Thee from me,
He called Pasam.
Whoever have understood these three
They are the liberated.

—Sivabogasaram.

The Siva Philosophy is, in a sense, typical of the entire range of Hindu thoughts. While, in all its forms, it subscribes to the belief in eternal independent THRI - PADARTHAS (God, Soul and Bonds) in other words PATI, PASU, and

PASAM and thirty-six TATTVAS (principles,) in reality ascribed to the TATTVAS and in the independence assigned to soul and matter, it varies from idealistic monism at one end of the scale to pluralistic realism at the other end. The Supreme Reality God (PATI) is called SIVA and is regarded as beginningless, uncaused, free from defects, the all-doer and the all-knower, who frees the individual soul from the bonds which fetter them. The Soul (PASU) is distinct from the gross body as well as the subtle, though united to them, and it has the functions of desire, thought and action. It becomes one with the thing in which it dwells for the time being. The soul is omnipresent, constant, conscious actor. Bonds (PASAM) are also eternal and are distinguished as Avidya, Karma, and Maya. They eclipse the soul from

realising God. Creation of the world and formation of bodies are the work of illusion. Illusion and.Creation are related together as mud and the pot. Embodied souls do actions and that is called Karma. We must get rid of them Avidya (bonds) which darken the light of the soul, neutralise the Karma which produces rebirth, and shake off the Maya which is the basis of all impurities. God helps us in our endeavours. Siva is full of grace and is waiting through successive aeons to receive the recognition of the soul and his adoring love. A personal tie binds the soul of God. The grace of God is the road to freedom. It demands childlike trust in Siva. Meikanda Deva and other teachers have explained the ways of the Souls discarding the bond and attaining God. which is only the attainment of *eternal bliss*.

# Origin

The teachings originating from Srikanta passed on to Nandideva of the Holy Kailasa. Hence this succession of Saiva Acharyas is called the Holy Kailasa Line. The line of disciples of Meikanda is known as Meikanda Santanam. Dharmapuram Adhinam is one of the Adhinams which trace descent from that line.

Through the Grace of Lord Chokkalinga of Madurai, Gurugnanasambandha became the first occupant of the pontifical throne of the Dharmapuram Adhinam. The line of succession started from him in the latter part of the 16th century. The Founder was one who had attained god-realisation and who gave to the world such rare works as Sivaboga-Sara, Chokkanatha Venba etc.,

which were veritable treasure-houses of knowledge. The disciples of Saint Agastya, who were residing here at that time, handed over to him the management of their hermitage and the temple.

After him, (Gurugnanasambanda) twenty-four Acharyas have ruled over the mutt. For the past 35 years, from the inception of the regime of the 23rd Acharya to that of 24th Sri-la-Sri Shanmuka Desika Paramacharya Swamigal, many activities relating to the growth of culture, spread of Saiva Religion and Philosophy as also many acts of samaritanism have been in progress and they have all been mentioned in detail in the decennial account published by the Adhinam in 1943. The present head of the Mutt His Holiness Subramania Desika Gnanasambandha Paramacharya

Swamigal is the 25th in the holy line of the distinguished successors.

## Motto of the Mutt:

Keep the truth apart for those
Whose love doth grow from more to more
Whose knowledge groweth from out that love
Who wipe out Karma the cause of pain
Who go running thirsting after
The Perfection that yieldeth Joy.

—Sivabogasaram.

## Activities carried now:

Devotees would have noticed, in the papers every year the publication of the various services, rendered according to the needs of the present time, by the present Holiness Sri-la-Sri Subramanya Desika Gnanasambandha Paramacharya Swamigal, the 25-th Mahasannidhanam, yet some are mentioned here.

This Adhinam was established in the latter part of 16th century, by its saintly founder Gurugnanasambanha Twentyfour Holy Persons have ruled over this mutt since then.

The well planned beneficence of the Acharyas for the spread of religion and knowledge has assumed several shapes and a short survey of the gifts and establishments will convince the public of their large-heartedness, foresight, sympathy, faith and devotion, purity of ideals and open-handed charity.

## Training of Othuvars:

In August 1942, a Patasala for the teaching of Thevara Hymns was opened.

During the last ten years the institution has been steadily growing. Now the pupils learning in it number 20.. They under-go a five years' course and get by heart three thousand stanzas in that course, besides learning Tamil Literature, Grammar and fundamental lessons on religion and general knowledge. Of the many suoh experts in Thevara who have come out of the school, a few have qualified themselves as Sangitha Bhushanas of the Annamalai University.

On the successful completion of the course they are awarded "Thevara Isai-mani" Title. The students and Masters take part in Thevara Goshties sent out to partake in temple festival processions and Thirumurai Festivals. Their fifth year course prepares them for sitting for the **University Examination for Tamil Entrance.**

In the big temples under this Adhinam Othuvars have been engaged to recite Thevara hymns during hours of worship and for Parayanam in the morning and evening hours. In such of them it has been arranged to give training in Thevara bajanai during the evening hours to the local school students in the temple premises itself. The students are offered scholarships, Prizes and other attractions. This has proved very successful and attracts many to it.

## Training of Archakas:

In 1943 the Agama Patasala was opened for training temple archakas to perform the duties with flawless, deep and accurate knowledge of the Agamas Vedas, and the Mantras, both in theory and practice. The present strength of the institution is 25

pupils. They learn Sanskrit literature along with general knowledge lessons and grammar during their five years' course. Their fifth year coincides with the Sanskrit Entrance class which prepares them for the Government examination qualifying them for College Studies in the Siromani Section. They are awarded "Agama Praveena" title on completion of their course.

## Oriental College:

In August 1946 an Oriental College affiliated to the Madras University was started with Tamil and Sanskrit sections; the courses taught being Vidwan 2-D., and Sahitya Siromani respectively. Three sets of full fledged Title Holders have already come out and many of them are employed as

Pandits in the various parts of the Tamil Land. About Hundred students are now studying in the College classes. All the Junior Thâmbirans of this Adhinam are being educated in this College. Some of them have qualified themselves as Vidwans after passing the University Examination.

## Higher Ely. School:

In addition to these institutions, there is also a Higher Elementary School, which had its small beginnings in 1942 as an Elementary School with two teachers and 70 pupils. The Institution now holds 365 pupils and 12 teachers. It promises to develop very early into a pucca High School. The Schools is now growing in strength and importance.

## Religious Instruction and Training:

Religious instruction is particularly given in all these institutions. Often special Summer Classes are conducted in Saiva Siddhantha and religion; and Pandits and others interested in Philosophy and religion are given tution.

The pupils of the above institutions worship in the temples daily and regularly take active part in the weekly tours to surrounding temples arranged by the Adhinam to inspire into the minds of the public Godliness, Faith and Trust in God.

## Propaganda

The Adhinam undertook as part of its duties, tours by the propaganda mission and has placed at its disposal a van which has taken it to almost all places of

Tamilnad, and to the neighbouring states of Travancore - Cochin and Mysore. The Mission has recently started Cheri Propaganda also and is doing it successfully.

Religious Conferences are frequently arranged under the auspices of the Adhinam and they last for several days, and bring together great savants to deliver lectures to the immense audiences which gather in the Mutt and various temples and other places on such occasions. In 1941 the memorable Meikandar Conference was held. The holding of such Conferences has become a regular features and is becoming increasingly popular.

## Publication :

The Adhinam owns a Press and is issuing a monthly Journal called "Gnanasamban-

dham" rich in religious and philosophical articles from the pen of eminent scholars. It has already published a number of valuable religious and philosophical literatures the serial number of which has come to 270 in the course of a few years. The most memorable publications in the series are Thiruvachakam and Thirukkural Variorum edition. Very many publications of the series have been highly applauded by the learned men of the Land, and the well merited popularity of the press is not a little due to neat execution, high editorial skill and the excellence of the subject chosen

The Library maintained by the Adhinam has got a good collection of religious and and philosophical books and is of great magnitude. The library has also got rare

collection of books of about 10,000 Volumes on several subjects in several Oriental and European Languages.

Monthly Thevara texts of the various holy temples along with a small account are also published. Books on Physics, Veda translation, basic principles of Hindu religion. books on Vrathas, are also published. They are being sent to all places and read by many thousands in Tamilnad, the neighbouring states and the northern parts of India and in Ceylon, Africa. Malayan States, Burma and other places where Tamilians reside. Adhinam publications are also sent to many of the Ambassadorial Offices in various parts of the world and to many University Libraries outside India. Last year Meykanda Sastram and allied books were supplied

free to some of the students of the London University and thanks to the efforts of M. S. H. Thompson Esq, Head of the Oriental and African studies the above books were studied in the University as the prescribed books for an examination. Thus it may be seen that this Adhinam is sparing no efforts to propagate the great truths to all in the known world.

## Administration:

There are about 27 temples and Kattalais under the management of this Adhinam. As a result of the efficient management of the properties the annual income of the Adhinam has considerably increased. Enormous sums have been spent on buildings and charities, and for public benefit. A part from the extension of the

Mutt premises by construction of Marai-gnana-sambandhar Nilayam and Arulnandi Nilayam, extensive renovation works have been executed at the various temples of the Adhinam followed by Grand Kumbabi-shegam ceremonies.

## Public Health & Sanitation:

A Maternity and child welfare Hospital in Mayuram Town was built at a high cost of more than a lakh of rupees and handed over to the Municipality recently in 1950. This Adhinam has donated large sums of money in aid of the Tuberculosis Sanitorium at Sengipetti, Tanjore District and to many other Hospitals.

Scavengers and sweepers have been appointed to keep the village clean and in

sanitary condition. Automatic Water pipe systems have been installed by this Adhinam in Dharmapuram. Vaithiswarankoil, Sirkali. Mayuram and Tiruvarur for the benefit of the public.

## Harijan Welfare:

Midday meal is supplied free to the Harijan children studying in the Adhinam Schools. Nearly 50 children are now being fed like this. Roads have been formed for the benefit of the cheries and their inhabitants. Wells have been sunk in the cheries for the use of harijans.

Harijan entry into the temples under this Adhinam is an accomplished matter even before the enactment of the Law in regard to it.

## Other social items.

Besides moneys contributed in response to charitable appeals for helping associations and conferences, and to poor pupils in schools, the Adhinam is conferring gold medal prizes to the best Tamil pupils in many High schools of Mayuram. Sirkali, and Tiruchi. Food and clothing are being freely distributed to the needy poor, refugees and other displaced persons. The Adhinam has brought back into the Hindu fold some misguided young men and children who had left their own religion to embrace other faiths. The poor villagers living around Dharmapuram are frequently supplied with food, gingelly oil and soap nut powder and at times with clothing. Pilgrims and other devotees stranded at times, for want of money are given financial

help to complete their journeys and fulfil their objects. Building materials and other facilities for the construction of huts, and houses, are being given to poor tenants who are homeless. Kasturi is offered to the woman for use during their pregnancy and confinement.

The following associations and institutions received financial aid from this Adhinam for the promotion of the objects.

1. Mayuram Hostel Fund.

2. Srivilliputhur Gnanasambandhar High School Building fund.

3. Kanjeepuram Somasundara Kanya Vidyalaya.

4. Tamil Kalai Kalanjiam in the University of Madras.

5. Publication of Tirukkural by the Ramakrishna Vidyalaya, Coimbatore.
6. Kumaraguruparan Girl's High school Srivaikuntam - Navarathiri day celebaration Festival.
7. Prayer Hall construction at the Basic Training School, Kilamoongiladi.
8. Perunthottam Board High School Fund.
9. Kuttalam Board High School Hostel.
10. Ramakrishna Poor Home, Madras.
11. Kasturba Kanya Gurukulam, Vedaranyam.
12. Tamil Isai Sangam, Madras.

The Dharmapuram Adhinam has greatly helped tiruppani works by way of substantial aid to institution such as:

1. Vadalur Ramalinga Swamy Madalayam.
2. Pilgrims Shed at Mariamman Koil, Tanjore.
3. Kasi Viswanathar Koil, Mayuram.
4. Thiruvalluvar Koil, Mylapore.

The Adhinam has also donated large sums of money in aid of the Kumbabishekam ceremonies of the various temples. Requisite materials for the Kumbabishekam also have been supplied.

Such big temples as Tirunelvelly, Palani, Tiruchendur, Thiruparankunram, Sankarankoil, Swamimalai also have received financial aid for Kumbabishekams.

## General:

The above are a brief list of the activities in which the Adhinam interested itself in

the past and is still continuing to show interest. An Account of there services is now being published with a view to make the general public know the real work done by this Adhinam. The Adhinam is now adapting itself to the needs of the times and is trying to be helpful without allowing its main purpose of improving the Saiva Siddhantha and Philosophy impaired in any way. The Adhina-karthars of this Mutt have very carefully studied the trend of the times and are making themselves as useful benefactors. The vast resourcess of money and other forms of wealth belonging to the mutt are also being utilised for the general welfare of the public and in the interests of the poor humanity.

---

## சொக்கநாத வெண்பா

எல்லாமும் வல்லசித்தர் என்றக்கால் என்னுடைய
பொல்லாக் கருத்தகற்றப் போகாதோ—வல்லாடும்
பொங்கரா வேணிப் புனிதா மதுரைநகர்ச்
சங்கரா சொக்கநா தா.

இறந்தும் பிறந்தும் இளைத்தேன் இனியான்
மறந்தும் பிறவா வரந்தா—சிறந்தபுகழ்
ஞாலவா யாமுடிக்கு நாட்டுசூ ளாமணியாம்
ஆலவாய்ச் சொக்கநா தா.

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம் — பாலொளியாம்
அத்தனே கூடல் மதுரா புரிஉமையாள்
அத்தனே ஆலவா யா.

பேரன்பன் அல்லன் பிழைசெய்யான் தானல்லன்
ஓரன்பும் இல்லா உலுத்தனேன் — பேரன்பு
காட்டிஎனைக் காட்டியுனைக் காட்டியின்பத் தொட்டிலிலே
ஆட்டிவளர் சொக்கநா தா.

கருணை நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே — ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா நந்தமே
ஆங்காண்நீ சொக்கநா தா.

உனக்குப் பணிசெய்ய உன்தனைஎந் நாளும்
நினைக்க வரம்எனக்கு நீதா — மனக்கவலை
நீக்கின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்கின்ற சொக்கநா தா.

நித்தம் எழுந்தருளி நின்மலனே என்றனக்குப்
புத்தி மிகமிகவும் போதித்துச்—சித்தமயல்
போக்குவாய் இன்பசுக பூரணத்தி ரண்டறவே
ஆக்குவாய் சொக்கநா தா.

உணர்த்தில் உணர்வேன் உணர்த்தாயேல் நாயேன்
கணத்தும் உணரும்வகை காணேன்—உணர்த்திஎன்னுட்
பூண்டமல மாயைகன்மம் போக்கிச் சிவானந்தத்
தாண்டருள்வை சொக்கநா தா.

கால வசமோ கடியேன் வினைவசமோ
ஞாலவச மோஅருளை நாடியே—கோலமறச்
சிற்பரா நந்தவெள்ளம் சேர்ந்தறிந்தும் சேர்கிலேன்
தற்பரா சொக்கநா தா.

# சொக்கநாதக் கலித்துறை

கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடு மற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட என்னையும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே.

பாடும் படிசெய் நினைநினைந் தேத்திப் பணிந்தெழுந்தே
ஆடும் படிசெய் மலமைந்து மேயடி யேனுளத்தே
வீடும் படிசெய்நின் னானந்த சாகர மேலெனவே
நாடும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே.

அறிவைத் திருப்பிநின் பாதார விந்தம் அடையவல்ல
நெறியைக் கொடுத்து நிறுத்தினை யேநின்ம லாஇனியென்
பொறியைத் தவிர்த்துநின் ஆனந்த சாகர பூரணத்தைப்
பிறிவற் றிருக்கவைப் பாயென்னை யாண்டருள் பிஞ்ஞகனே.

# ஞானப்பிரகாச மாலை

திருவார் கமலையுண் ஞானப்ர காசன் திருவடிக்கீழ்
வருவா ரவர்வழி வாரான் சமனும் மலரயனும்
கருவா யிடுவதற் கெண்ணு னெந்நாளுங் கருத்தினில்நீ
வெருவாய் சுகத்தினில் வாழ்வாய் பரானந்த மேவிடுமே.

காரே சுமந்த கிரிமீது நின்று கடுங்கனலில்
நேரே யருந்தவஞ் செய்வீர் கமலைய னெஞ்சிலன்பர்
ஆரே னுமாள்பவன் ஞானப்ர காச னடியரெனும்
பேரே படைமி னதுபோதும் போதும் பிறப்பறவே.

கருவாச விற்புலக் கள்வர்தம் வாசலிற் கட்டரையன்
பெருவாசலின்மற் றைப்பேதையர்வாச லும் பின்செல்வரோ
மருவாசம் வீசும் மதுரேசன் சம்பந்தன் வாழ்மடத்தின்
திருவாச லிற்செல் லுஞ் செல்வர்தம் வாசலிற் செல்பவரே.

# சிவபோகசாரம்

என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும் — என்னைஉன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்.

ஒருகோடி ஆகமங்க ளெல்லாம் உணர்ந்தும்
பெருகுதவஞ் சித்தியெல்லாம் பெற்றும் - குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தசல னம்மாந் தினம்.

உள்ளங் கரைய உடல்கரைய ஆனந்த
வெள்ளங் கரைபுரண்டு மேலாகக் — கள்ளமலம்
பொய்யாக என்னுட் புகுந்தவா றென்கொலோ?
ஐயா தியாகவினோ தா.

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னாலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே.

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக் கொண்டியற்று மானால் — அவரவரை
நல்லார்பொல் லாரென்று நாடுவதென் நெஞ்சமே
எல்லாஞ் சிவன்செயலென் றெண்.

எவ்வுயிருங் காக்கவோர் ஈசனுண்டோ இல்லையோ
அவ்வுயிரில் நாமொருவர் அல்லவோ — வவ்விப்
பொருகுவது நெஞ்சே புழுங்குவதும் வேண்டாம்
வருகுவதுந் தானே வரும்.

முப்பதுஞ்சென் றால்விடியும் முப்பதுஞ்சென் றாலிருளும்
அப்படியே ஏதும் அறிநெஞ்சே—எப்பொழுதும்

ஆங்காலம் எவ்வினையும் ஆகும் அதுதொலைந்து
போங்காலம் எவ்வினையும் போம்.

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறியர் இவரலா திவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல்.

எத்தனைதான் கற்றாலும் எத்தனைதான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புறா—சித்தமே
மெய்யாகத் தோன்றி விடும்உலக வாழ்வனைத்தும்
பொய்யாகத் தோன்றாத போது.

ஐந்தறிவாற் கண்டாலும் ஆர்எது சொன்னாலும்
எந்த விருப்புவெறுப் பெய்தாலுஞ்—சிந்தையே
பார விசாரத்தைப் பண்ணாதே ஏதொன்றும்
நீர விசாரித்துச் செய்.

பரபரக்க வேண்டாம் பலகாலுஞ் சொன்னேன்
வரவரக்கண் டாராய் மனமே—ஒருவருக்கும்
தீங்கு நினையாதே செய்ந்நன்றி குன்றாதே
ஏங்கி இளையா திரு.

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய்—சீ சீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அனுபவம்
எவரெவர்க் குதவினர் எவரெவர்க் குதவிலர்
தவரவர் நினைவது தமைஉணர் வதுவே.

# முத்திநிச்சயம்

சந்தான நற்குரவர் தக்கோர் பிறர்சமயம்
நந்ாது தோற்றுவித்த நற்குரவர்—முந்தவே
எந்தமுத்தி சித்தாந்த மென்றூர்கள் சைவத்தில்
அந்தமுத்தி நிச்சயிப்பேம் யாம்.

உள்ள மலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே—கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு.